# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

• Volume : 2 • Issue : 6 • **August 2015** • Annual Subscription Rs. 100/- • மலர் 2 • இதழ்: 6 • ஆகஸ்ட் 2015 • வருடச் சந்தா ரூ.100/-



# இந்த உலகம் ஒரு மாயையா?

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்





விடுதலை, முக்தி, மோட்சம் என்பது மன அனுபவங்களிலிருந்து விடுபடுவதே. உலகத்திலிருந்து விடுபடுவது விடுதலை அன்று. மனதுக்குத் தேவை முக்தி. உலகுக்கு தேவை பந்தம். விடுதலையோடு இருப்பது தான் மனதுக்கு சரியானது. உலகத்துடன் நாம் பந்தப் பட்டிருப்பதுதான் உலகத்தோடு செயல்படும் நமக்குச் சரியானது.

கூடுதல் தகவல்களைப் பெற விருப்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விருப்புகிறீர்களா?

*If undelivered please return to:*





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com


## சத்சங்கங்கள்

**1. ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,**
23/10, பழைய பரோடா வங்கித் தெரு,செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை- 600053. செல்: 9884097438, 9381019479, 9444756744

**2. திரு. ரவிச்சந்திரன் இல்லம்**
24/35, கிருபசங்கரி தெரு, வெஸ்ட் மாம்பலம், சென்னை- 600033. செல்: 9444402986, 7299186793, 7299049789

**3. டாக்டர். முத்துலட்சுமி, திரு. சரவணன்**
362, Flat G3 CDS Regal Palm Gardens, வேளச்சேரி, சென்னை- 600042. செல்: 94444 02986,

**4. South Indian Buddhist Association,**
25/44, Paddy Field Road, Perambur, (Adjacent to Perambur Bus Stand) Chennai - 11. Cell: 9940502239, 9444441066, 9884063969

**5. P.சௌந்தரராஜன்**
No.7/201, வேளைக்கல்மேடு, வடவாக்கம் கிராமம், மதுராந்தகம், காஞ்சிபுரம் மாவட்டம் – 603306. செல்: 93446 72981

**6. M.சிவக்குமார்**
No.7-A, முதல் மெயின் ரோடு, சாந்தி நிகேதன் காலனி, மாடம்பாக்கம், சென்னை – 600126. செல்: 94448 99858

**கோவையில் 1. திரு. மாதவன்பாபு**
Flat No.3-A, Saffron Beehive Apparments ராஜகோபால் லே அவுட், பஃராணி காலனி அருகில், பீளமேடு, கோவை -641004. செல்: 95660 39408, 0422 4214408

**சேலத்தில் 1. ஸ்ரீ பகவத் மிஷன்**
31 இராமலிங்க சாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 636003. செல்: 9994205880, 9789165555 நேரம்: 4.00 Pm to 6.00 Pm

**சத்சங்கம் நடைபெறும் அனைத்து இடங்களிலும் ஐயாவின் அனைத்து நூல்களும் கிடைக்கும்.**



## இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு




சேலம் திருவருட்சோலையில் 26-07-2015 அன்று நடைபெற்ற கலந்தாலோசனைக் கூட்டத்தில் சற்குருநாதர் தேனி சுவாமிகள் **பகவத் பாதை 3 ஆண்டு தொகுப்பு நூலை** வெளியிட துறையூர் ஸ்ரீமத் ஸ்வரூபானந்த சுவாமிகள் பெற்றுக் கொண்டார். இனி நமது சத்சங்க மையங்களில் இந்நூல் கிடைக்கும்.

விலை ரூ. 200/- பக்கங்கள் 256



www.pravaagam.org
www.sribagavath.org





# இந்த உலகம் ஒரு மாயையா?

உலகம் ஒரு மாயை என்று கூறப்படுகிறது. இந்த பிரபஞ்சமும், அதிலுள்ள உயிர்களும் தோன்றி மறையக் கூடியவை. ஆகவே அது ஒரு மாயை.

– இப்படிக் கூறப்படுகிறது.

இது உண்மையா–

இப்படிக் கூறுபவர்கள் யார்– ஏன் இப்படிக் கூறுகிறார்கள்–

நாம் பார்க்கும் இந்த உலகம் பொய்யானதா– நாம் பார்க்கும் மனிதர்களும், மிருகங்களும், தாவரங்களும் பொய்யான அம்சங்கள் தானா–

நீங்களும், நானும் பொய்யா–

வேதாந்த பண்டிதர் ஒருவர் உபந்நியாசம் செய்து கொண்டிருந்தார். “இந்த உலகம் என்பது ஒரு மாயை. உண்மையில் இல்லாத ஒன்று. மனைவி, மக்கள், வீடு, சொந்தங்கள், பந்தங்கள் அனைத்தும் மாயை.”

–இப்படி அவர் விளக்கிக் கூறிவந்தார்.

அந்தக் கூட்டத்திற்கு அந்தப் பண்டிதரின் நண்பர் ஒருவரும் வந்திருந்தார். சில தினங்களுக்கு முன்னால் தான் அவருடைய குழந்தை இறந்து போயிருந்தது. அவரால் அந்தத் துயரத்திலிருந்து மீள முடியவில்லை. உபந்நியாசத்திலாவது ஆறுதல் கிடைக்கும் என்று எண்ணி அங்கு வந்திருந்தார்.

எல்லாம் மாயை மாயை என்று பண்டிதர் கூறிக் கொண்டிருந்தார்.

பண்டிதரிடம் தனது நிலையைக் கூறினார் : “எல்லாம் மாயை என்று சுலபமாகக் கூறிவிட்டீர்கள் ஆனால் எனது குழந்தை இறந்து போனதை என்னால் சுலபமாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை. எனது குழந்தை மாயையாகத் தோன்றவில்லை. என்னால் துயரத்தைத் தாங்க முடியவில்லை.”

பண்டிதர் அவருக்கு ஆறுதல் கூறினார் : “தொடர்ந்து இப்படி உபந்நியாசம் கேட்டு வந்தால் உனது குழந்தை மாயை என்பது புரிந்து விடும். மனைவி, மக்கள் அனைவரும் மாயையே.”

இரண்டு தினங்களுக்குப் பிறகு பண்டிதரின் குழந்தை, ஆற்றில் தவறி விழுந்து இறந்து போய் விட்டது.

அந்தப் பண்டிதர் தனது குழந்தையின் மரணத்தைத் தாங்க முடியாமல் அழுதார்.

இப்போது அவருக்கு ஆறுதல் கூற அந்த நண்பர் சொன்னார்.

‘‘இறந்து போன உங்கள் குழந்தை மாயைதானே– அதற்கு நீங்கள் அழலாமா–” – என்று கேட்டார்.

அதற்குப் பண்டிதர் தனது அழுகையினூடே பதில் கூறினார். ‘‘இப்போது இறந்தது உன் குழந்தையல்ல ; அது என் குழந்தை.”

உபதேசம் ஊருக்குதானே தவிர தனக்கல்ல என்பது போல் அவர் நடந்து கொண்டார்.

அவர் நடந்து கொண்டது தவறா–

அந்தப் பண்டிதர், தனக்கு என்ன இழப்பு ஏற்பட்டாலும் அதனை மாயை என்று தான் கூறவேண்டுமா–

அது தான் உண்மையா–

அனைத்தும் மாயை என்பது தான் உண்மை நிலையா–

நாம் பார்க்கும் உலகமும், உலகத்து உயிர்களும் பொய்யனவையா– –மாயையா–

பிரம்மம் மட்டுமே உண்மையானது; பிரபஞ்சம் என்பது பொய்யானது.

–இப்படிக் கூறப்படுகிறது.

இது உண்மையா அல்லது பொய்யா–

இது உண்மை தான் என்றால் அது எந்த அளவிற்கு உண்மையானது–

அது சரியல்ல என்றால் அது எந்த நிலையில் சரியானது அல்ல–

நாம் இருவரும் ஒன்றாக மாலை நடந்து செல்வதாக வைத்துக் கொள்வோம்.

நாம் செல்லும் பாதையில் ஒரு மாமரம் நின்று கொண்டிருக்கிறது.

எனது கண்களுக்கு மாமரமாகத் தோன்றிய ஒன்று தான் உங்கள் கண்களுக்கும் மாமரமாகத் தோன்றுகிறது.

நம் அனைவருக்குமே அது மாமரந்தான்.

நாம் மேலும் நடந்து செல்கிறோம். நமக்கு எதிரே உங்களுடைய நெருங்கிய நண்பர் வருகிறார். அவரைக் கண்டதும் நீங்கள் மிகவும் மகிழ்ச்சியடைகிறீர்கள்.

ஆனால், உங்கள் நண்பரை எனக்குப் பிடிக்காது. அவருக்கும், எனக்கும் ஆகாது. அவரைக் கண்டதும் எனக்கு வெறுப்புணர்வு ஏற்படுகிறது.

நாம் மாமரத்தைப் பார்க்கும் போது இருவருக்கும் ஒரே விதமான காட்சியே ஏற்பட்டது.

உங்களுடைய நண்பரைப் பார்க்கும் போது

இரண்டு விதமான தோற்றம் ஏற்படுவதற்கு அவர் காரணமாகிறார்.

மாமரத்தைப் பார்க்கும் போது நமக்கு ஒரே விதமான அனுபவம் ஏற்பட்டது.

ஆனால், உங்கள் நண்பரைப் பார்க்கும் போது நமக்கு இரண்டு விதமான அனுபவங்கள் ஏற்படுகின்றன.

ஒரே பொருளைக் குறித்து இரண்டு விதமான அனுபவங்கள் ஏற்படும் போது

அந்தப் பொருளும் இருவிதத் தன்மையுடையதாகக் கருதப்பட்டுவிடுகின்றது.

அப்படி ஒரு பொருளை இரண்டாகக் காண்பதற்குக் காரணம் நம்முடைய மனது தானே தவிர

அந்தப் பொருள் அதற்குக் காரணம் அல்ல.

குற்றம் நம்மிடந்தான் உள்ளதே தவிர பொருளில் இல்லை.

மயக்கத்தை நாம்தான் உருவாக்குகிறோம்.

பொருளானது எந்த மயக்கத்தையும் உருவாக்குவதில்லை.

மாயையை நாம் தான் உருவாக்குகிறோமே தவிர பொருட்களில் எந்த மாயையும் இல்லை.

மாயை என்பது மனதால் உருவாக்கபட்டதே தவிர

பொருட்களால் உருவாக்கப்பட்டதன்று,

மன உலகந்தான் மாயையே தவிர

புற உலகம் மாயை அன்று.

நமது மனோ அனுபவங்கள் தாம் மாயையே தவிர

அதற்குக் காரணமான புற உலகம் மாயை அன்று.

மன உலகம் தான் மாயையே தவிர புற உலகம் மாயை அன்று.

புற உலகம் உண்மையானது; நிதர்சனமானது.

நீங்கள் இருப்பதும், நான் இருப்பதும் உண்மையே; பொய்யானது அல்ல.

ஆனால் மனோ அனுபவங்கள் பொய்யானவை; நிரந்தரமற்றவை.

ஒரு அனுபவத்தின் ஆயுள் ஒரு விநாடியில் 60ல் 1 பங்கு தான். ஒரு விநாடிக்கு 60 அனுபவங்கள் ஏற்படுகின்றன.

சினிமா காட்சிகளும் இவ்வாறு தான் உள்ளன. ஒரு விநாடிக்கு 24 காட்சிகள் ஓடுகின்றன. அதன் மூலம் ஒரே ஒரு காட்சியைக் காண்பது போல் நாம் உணர்கிறோம்.

இதுபோல் விநாடிக்கு 60 அனுபவங்கள் வந்து சென்றாலும் நாம் ஒரேயொரு அனுபவமாக மட்டுமே கிரகித்து அறிகிறோம்.

ஒவ்வொரு அனுபவமுமே அது மறைந்து விடும் போதுதான் நம்மால் அறியப்படுகிறது.

அது இல்லாமல் போகும் போது தான் அது இருப்பதாக நாம் அறிகிறோம்.

இதுதான் மாயை.

இது நம் மனோ அனுபவத்துக்கு மட்டுமே பொருந்தும்.

நாம் பல வருடங்களாக சிரமப்பட்டு வீடு ஒன்றைக் கட்டுகிறோம்.

ஆனால், அப்படிக் கட்டப் பட்ட வீடு மறுநாளே மறைந்து போய்விட்டால் எப்படி இருக்கும்–

கட்டிய வீடு மறைந்து போகாமல் இருந்தால் தான் சரியானதாகும்.

நம் மனதில் ஏற்படும் அனுபவங்கள் கணப் பொழுதில் மறைந்துவிடுகின்றன எனப் பார்த்தோம்.

அது மறையாமல் அப்படியே நிலைத்து இருந்தால் என்ன ஆகும்–

நமக்கு ஏற்படுவது இன்ப அனுபவமாக இருந்தாலும் சரி அல்லது துன்ப அனுபவமாக இருந்தாலும் சரி,

அவை நீடித்து இருக்குமேயானால் அவை நம் உடலிலுள்ள நரம்பு மண்டலங்களைப் பாழ் படுத்திவிடும்.

அவை தோன்றி மறைவது தான் ஆரோக்கியமானது. அவை மாயையாக இருப்பது தான் சரியானது.

நம்முடைய மனம் பிரச்சினை இல்லாமல்

புறத்திலிருக்கும் பிரச்சினைகள் எவையும் பிரச்சனைகளே அல்ல.

ஆனால் ஒரு சராசரி மனிதனால், அகத்தையும், புறத்தையும் பிரித்துப் பார்க்க முடியாது.

ஆகவே தனது மனவேதனைகளுக்குக்

காரணம் புற உலகமே என்ற முடிவுக்குத் தான் அவனால் வரமுடியும்.

ஆகவே, உலகத்தையும், உலகத்து விவகாரங்களையும் துறந்து ஒதுங்கி இருப்பதன் மூலம்

மனதை வெல்லுவதை ஓர் உபாயமாகக் கொடுத்துள்ளார்கள்.

மலரையும் மலரின் வாசனையையும் பிரிக்க முடியாது.

இதுபோல் புறச் செயல்களையும் அவற்றிலிருந்து ஏற்படும் இன்ப துன்ப அனுபவங்களையும் பிரிக்க முடியாது என எண்ணி விடுகின்றனர்.

ஆனால் நமது இன்ப துன்ப மனோ அனுபவங்கள் யாவும்

கண்ணாடியில் பிரதிபலிக்கும் நமது பிரதிபலிப்புத் தோற்றங்களேயாகும்.

கண்ணாடியின் எதிரிலிருந்து நாம் நகர்ந்து கொண்டால் பிரதிபலிப்புத் தோற்றமும் மறைந்துவிடும்.

பிரதிபலிப்புத் தோற்றம் நிரந்தரமானதல்ல என்பதைப் புரிந்து கொள்வதற்காகத்தான்

ஒருவரை கண்ணாடியின் முன்னாலிருந்து நகர்ந்து கொள்ளும்படிக் கூற வேண்டியுள்ளது.

பிரதிபலிப்புத் தோற்றங்களெல்லாம் வெறும் நிழல் தோற்றங்களே என்பதை நாம் புரிந்து கொண்ட பிறகு நாம் கண்ணாடியின் முன்பு தாராளமாக நின்று கொள்ளலாம்.

இப்படியொரு விளக்கத்தை நாம் அடைய வேண்டும் என்ற நோக்கத்திலேயே துறவறம் நமக்குக் கற்பிக்கப் படுகிறது.

அகத்துறவை அடைய வேண்டும் என்ற நோக்கத்திலேயே புறத்துறவு போதிக்கப்படுகிறது.

அகத்தில் அனைத்தும் நிழல்களே என்று புரிந்து கொள்ளும் போது

அதில் உயர்ந்த நிழல், தாழ்ந்த நிழல் என்று எதுவுமே இல்லை.

ஆகவே நாம் நமது அகத்தைப் பொறுத்த வரையிலும்

நாம் அடைய வேண்டிய உயர்ந்த நிழல் எதுவுமே இல்லை.

அதுபோல் நாம் அப்புறப்படுத்த வேண்டிய தாழ்ந்த நிழலும் எதுவும் கிடையாது.

நமது பிரதிபலிப்புகளிலிருந்து விடுபடுவதற்காக,

நாம் கண்ணாடியிலிருந்து நிரந்தரமாக விலகியிருக்கத் தேவையில்லை.

இத்தகைய விளக்கம் நமக்கு ஏற்பட எவ்வளவு கால நேரம் நமக்குத் தேவைப்படும்–

நம் மன வேதனையின் கோரப்பிடியில் இருப்போமானால்,

இந்த வழி காட்டலைப் பயன்படுத்தி ஒரே நாளில் – ஒரு மணி நேரத்தில் கூட இந்த விளக்கத்தைப் பெற்று விட முடியும்.

மற்றபடி – ஆன்மிக முயற்சி என்னும் சாதனைகளில் ஈடுபட்டு வருவோர்களுக்கும்

இந்த விளக்கம் சுலமாகக் கிடைத்துவிடும்.

ஒன்று அல்லது இரண்டு வருட ஆன்ம சாதனையாளர்களாக இருந்தால் கூடப் போதுமானதே.

ஆயுள் முழுவதும் ஆன்மிக சாதனைகளிலேயே இருக்க வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கத் தேவையில்லை.

ஆன்மிகத்தின் ஆரம்பப் பாடம் தான் "அடைவது." ஆன்மிகத்தின் இரண்டாவது பாடம் "அடைவது" அன்று.

நாம் கற்றுக் கொள்ள வேண்டிய இரண்டாவது பாடம் "விடுவது".

ஆன்மிகத்தின் முதற்பாடம் **"அடைவது"** இரண்டாவது பாடம் **"விடுவது".**

அடைவது என்பது வைத்துக் கொள்வது. நாம் எதை வைத்துக் கொண்டாலும் அது நமக்குப் பாரமாகத்தான் இருக்கும்.

எந்தச் சுமையாக இருந்தாலும் அது நமக்கு அழுத்தத்தைத் தான் அளிக்கும். விட்டுவிட்டால் நமக்குச் சுமையில்லை.

புற உலகத்தையும், புற உலகப் பொருட்களையும், மனைவி மக்களையும், பதவியையும், செல்வத்தையும் விட்டுவிடத் தேவையில்லை.

மன அனுபவங்களை மட்டுமே விட்டு விட வேண்டும். பந்தம் என்பது மன அனுபவங்களைப் பிடித்து வைக்கப் போராடுவதே, மன அனுபவங்களை அப்புறப்படுத்தப் போராடுவதே.

விடுதலை, முக்தி, மோட்சம் என்பது மன அனுபவங்களிலிருந்து விடுபடுவதே.

உலகத்திலிருந்து விடுபடுவது விடுதலை அன்று.

–முக்தி அன்று.

மனதுக்குத் தேவை முக்தி.

உலகுக்குத் தேவை பந்தம்.

விடுதலையோடு இருப்பது தான் மனதுக்கு சரியானது.

உலகத்துடன் நாம் பந்தப் பட்டிருப்பதுதான் உலகத்தோடு செயல்படும் நமக்குச் சரியானது.

- ஸ்ரீ பகவத்



## "நான்" நிரந்தரமில்லையா

# கேள்வி பதில்



-V.A.P. சரவணன்
செல் : 99942 05880
சேலம்.

**கேள்வி :** நான் பகவத் ஐயாவின் நூல்கள், பகவத் பாதையை படித்தும், ஞானமுகாமில் கலந்து கொண்டும், மனதைப் பற்றிய புரிதலை நன்றாகப் புரிந்து கொண்டு இருக்கிறேன். எண்ணம், உணர்வு தாமாக தோன்றுகின்றன என்பதை நன்றாகப் புரிந்து கொண்டேன். அதனால் என்னை ஆட்டி படைத்துக் கொண்டு இருந்த எத்தனையோ விசயங்கள் என்னை விட்டுச் செல்வதை நன்றாக உணர்கிறேன். என்னுடைய முந்தைய மனநிலைக்கும், இந்த புரிந்த மனநிலைக்கும் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. ஆனால் இந்த "நான்" என்பதில் மட்டும் இன்னும் ஒரு தெளிவான முடிவுக்கு வர முடியவில்லை. ''நான் என்பது கூட எண்ணம், உணர்வு போல கணத்திற்குக் கணம் தோன்றி மறைகிறது" என்று ஐயா பல நூல்களிலும் கூறி இருப்பினும் நிரந்தரமாக நான் இருப்பதாகவும், அந்த ''நான்''குத் தான் எல்லா எண்ணங்களும், உணர்வுகளும் ஏற்படுவதாகவும் தோன்றுகிறது. இந்த நான் நிரந்தரமான ஒன்று இல்லை என்பதை எப்படிப் புரிந்து கொள்வது? சற்று விளக்கமாகக் கூறவும்.

**பதில் :** நீங்கள் இந்தக் கேள்வியை கேட்டு இருப்பதன் மூலம் நீங்கள் எந்த அளவிற்கு பகவத் ஐயாவின் புரிதலை நடைமுறை வாழ்வில் உணர்ந்து இருக்கிறீர்கள் என்பது நன்றாகத் தெரிகிறது.

"பகவத் ஐயாவின் நூல்களில் 'நான்' என்பது நிரந்தரமான ஒன்று இல்லை என்பதை பல்வேறு வகையில் எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அவர்கள் அப்படிக் கூறுவதை உங்களால் கருத்தளவில் ஏற்றுக்கொள்ள முடிகிறது, ஆனால் நான் என்று ஒன்று நிரத்தரமாக இருப்பது போலும் அதற்குத் தான் எல்லாவிதமான எண்ணங்களும், உணர்களும் ஏறபடுவதாகவும் தோன்றுகிறது" என்று கூறுகிறீர்கள். அந்த "நான்" நிரந்தரமான ஒன்று இல்லையா என்பதை தெரிந்து கொள்வது தான் உங்களின் பிரதான கேள்வியாக உள்ளது.

நமக்கு எண்ணம், உணர்வு தாமாகத் தோன்றி தாமாக மறைகிறது என்பதில் எந்த சந்தேகமும் கிடையாது. ஓர் எண்ணம், உணர்வு தோன்றிய பிறகு தான் நமக்கு இப்படி ஓர் எண்ணம், உணர்வு ஏற்பட்டுள்ளது என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. இப்படி எண்ணம், உணர்வு தோன்றுவதற்கு முன்பாகவே நமக்கு அடுத்தது, இந்த எண்ணம், உணர்வு தான் தோன்றும் என்று நிச்சயமாக நம்மால் கூற முடியாது. எந்த விதமான

எண்ணமாகவோ, உணர்வாகவோ இருந்தாலும் தோன்றிய பிறகு மட்டுமே நம்மால் அடையாளம் கண்டு உணர முடியும்.

ஓர் எண்ணத்திற்கும் அடுத்த எண்ணத்திற்கும் இடையே உள்ள இடையவெளியை நம்மால் உணர முடிகிறது. ஒரு அனுபவத்திற்கும் அடுத்த அனுபவத்திற்குமான இடைவெளியை நன்றாக உணர முடிகிறது.

ஆனால் இந்த 'நான்' என்பது மட்டும் நிரந்தரமாக இருப்பது போல் தோன்றுகிறது. அந்த 'நான்'க்குத் தான் எல்லாம் வந்து போய் கொண்டு இருப்பதாகத் தோன்றுகிறது. பகவத் ஐயா இந்த நான் என்பதும் எண்ணம், உணர்வைப் போல் தோன்றி மறையக் கூடிய ஒன்று தான் என்று பல்வேறு வகையில் நூல்களில் கூறி இருக்கிறார்கள். ஆனால் நம்மால் நான் என்பதை மட்டும் தோன்றி மறைவதாக எடுத்துக் கொள்ள முடியவில்லை. ஓர் எண்ணத்தையும் அடுத்த எண்ணத்தையும் பிரித்து உணர்வது போல் இந்த "நான்" என்பதை மட்டும் பிரித்து உணர முடியவில்லை. எண்ணம் என்பது அடுத்தடுத்து தொடராக வந்து கொண்டு இருப்பது நன்றாக தெரிகிறது. அதுபோல் இந்த நான் என்பதை ஒரு எண்ணத்தையும் அடுத்த எண்ணத்தையும் பிரித்து புரிந்து கொள்வதைப் போல் ஒரு நானையும் அடுத்த ஒரு நானையும் பிரித்து புரிந்து கொள்ள முடிந்தால் இந்த நானும் நிரந்தரமான ஒன்று இல்லை என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியும். ஆனால் "நான்"ஐ மட்டும் நம்மால் பிரித்து புரிந்து கொள்ள முடியவில்லை அது ஏன்?

உதாரணமாக, ஒரு மரத்தை பார்க்கிறோம். மரம் தெரிகிறது. மரத்தின் நிழலும் தெரிகிறது. மரத்தின் அடிப்பகுதி மற்றும் மரத்தின் கிளைகள் எல்லாம் பிரவுன் (Brown) நிறத்திலும், இலைகள் பச்சை நிறத்திலும் பூக்கள் மஞ்சள் நிறத்திலும், காய்கள் வெளிர் பச்சை நிறத்திலும் கனிகள் சிவப்பாகவும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு நிறத்தில் நமது கண்களுக்குத் தெரிகின்றன. மரத்தின் அடிப்பகுதி, கிளைகள், இலைகள், பூக்கள், காய்கள், கனிகள் என பல வண்ணங்களையும் ஒவ்வொன்றாக பிரித்துப் வேறுபடுத்திப் பார்க்க முடிகிறது.

இப்போது அதே மரத்தின் நிழலை மட்டும் பார்க்கிறோம். மரத்தின் அடிப்பகுதி, கிளைகள், இலைகள், கனிகள் என அனைத்தும் ஒரே கருப்பு நிறத்தில் நிழலாக மட்டும் தெரியும். மரத்தின் நிழலில் மரத்தின் பல்வேறு வண்ணம் எதுவும் தெரிவதில்லை. மரத்தின் வெளிப்புறத் தோற்றம் (Out Look) மட்டுமே மொத்த வடிவமாகத் தெரிகிறது. நிஜ மரத்தின் ஒவ்வொரு பகுதியையும் பிரித்துப் பார்த்துத் தெரிந்து கொள்வது போல் மரத்தின் நிழலில் பிரித்துப் பார்க்க முடியாது. ஒட்டு மொத்தமாக ஒரே நிழலாக மட்டுமே தெரியும். நிழல் என்பது மரத்தின் பிரதிபலிப்பே. நிழல் ஒரு போதும் மரம் கிடையாது. மரம் தெரியும் போது நிழலும் தெரியும். நாம் மரத்திற்குத் தான் முக்கியதுவம் கொடுப்போம் ஏனெனில் மரத்தின் பிரதிபலிப்பே நிழல். நிழல் ஒருபோதும் நிஜம் இல்லை.

நிழல் உண்மையும் இல்லை. அது வெறும் மாயையான கானல் நீர் தோற்றம் மட்டுமே. நிஜத்தின் பிரதிபலிப்பே நிழல். நிஜம் வேறு நிழல் வேறு, நிஜம் மறையும் போது நிழலும் மறைந்துவிடும்.

இப்படித்தான் அனுபவம் தோன்றும்போது அனுபவத்தின் நிழல் ஆகிய அனுபவிப்பவன் என்னும் 'நான்'னும் தோன்றிவிடுகின்றான். அனுபவம் மறையும் போது அந்த அனுபவிப்பவனாகிய 'நான்'னும் மறைந்து விடுகிறான்.

நமக்கு எத்தனை அனுபவம் தோன்றினாலும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாக உள்ளது. ஆனால் அனுபவிப்பவனாகிய நான் மட்டும் நிரந்தரமாக இருப்பது போல் இருக்கிறது என்று கூறுகிறோம். உண்மையில் அனுபவிப்பவனாகிய 'நான்'னிலும் வித்தியாசம் உள்ளது. சற்று நுட்பமாக சிந்தித்தோமானால் அந்த வித்தியாசத்தைப் புரிந்து கொள்ளலாம். உதாரமணமாக, நாம் ஒரு மரத்தை பார்க்கிறோம். ஒரு பஸ்ஸை பார்க்கிறோம். ஒரு பைக்கை பார்க்கிறோம். இவை அனைத்தும் அதனதன் வடிவத்திலும், வண்ணங்களிலும் வேறுபடுகின்றன. ஆனால் அவைகளின் நிழலை பார்த்தால் வடிவத்தில் மட்டும் சற்று வேறுபாடு தெரிகிறது. வண்ணம் ஒன்றுபோல் கருப்பாக ஒன்றாக மட்டுமே தெரிகிறது. அதில் ஒவ்வொரு பகுதியாக பிரித்து காட்டும் வண்ணம் தெரிவதில்லை. இவைகளின் நிழல் அனைத்தும் ஒன்றுபோலவே காட்சியளிக்கிறது. இதுபோலத்தான் நமக்கு ஏற்படும் அனுபவங்களை பல்வேறு வண்ணங்களை பார்ப்பது போல் நம்மால் பிரித்து பார்க்க முடிகிறது.

அனுபவங்களின் நிழல்களாகிய அனுபவிப்பவனை அவ்வாறாக பிரித்து பார்க்க முடியவில்லை. நிழல்களின் தோற்ற வடிவங்களின் வேறுபாட்டை பிரித்து பார்த்து அது எந்த அனுபவத்தை சார்ந்த அனுபவிப்பான் என்பதை நம்மால் அறிய முடியும். அப்படி அறிபவனும் ஓர் அனுபவிப்பவனே.

இன்னும் நன்றாக விளங்கி கொள்வதற்கு கானல் நீர் உதாரணத்தை பற்றி நாம் தெரிந்து கொள்வோம். நாம் காரில் பயணம் மேற்கொள்கிறோம், மதிய நேரம், நாம் காரில் பயணிக்கும் பாதையில் தொலைவில் கொஞ்ச தூரத்தில் பள்ளத்தில் தண்ணீர் இருப்பது போல் கானல்நீர் தோற்றம் தெரிகிறது. அருகில் செல்லச் செல்ல கானல்நீர் மறைந்து பாதையின் அடுத்த தொலைவில் இருப்பது போல் காட்சி அளிக்கிறது. உண்மையில் கானல்நீர் இல்லை, இருப்பது போல் காட்சி தருகிறது. கானல்நீர் இருப்பது போல் தெரியும் ஆனால் உண்மையில் இருக்காது என்பதை நாம் புரிந்து கொண்டு கானல்நீருக்கு எந்த முக்கியத்துவமும் கொடுக்காமல் நாம் நமது பயணத்தை மேற்கொள்கிறோம். இப்படித்தான் நான் என்னும் நிழல்த் தோற்றமும் உள்ளது.

நாம் மீண்டும் ஆரம்பித்த இடத்திற்கே வருவோம். நம்மை பொறுத்த வரையில் நான் என்பது நிரந்தரமான ஒன்று; அதற்குத் தான் எல்லாம் வந்து போவதாகத் தோன்றுகிறது. நான் என்பது நிரந்தரமான ஒன்று இல்லை என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். ' நான் ' என்பதும் எண்ணம், உணர்வை போல தாமாக தோன்றி மறையக் கூடிய ஒன்று தான் என்பதை நாம் புரிந்து கொண்டால் போதும். அதை எப்படி நாம் புரிந்து கொள்ள போகிறோம்?

நான் என்பது நிரந்திரமான ஒன்றாக இருந்தால் எண்ணமோ, உணர்வோ தோன்றுவதற்கு முன்பாகவே இந்த நானுக்கு இந்த எண்ணம் வருகிறது, இந்த உணர்வு தோன்றுகிறது என்பது தெரிந்திருக்க வேண்டும். நான் என்பது நிரந்திரமான ஒன்றாக இருந்தால் நிச்சயம் என்ன எண்ணம் வரும் என்ன உணர்வு வரும் என்பது நானுக்கு தெரிந்திருக்கும். நமது மனதில் தாமாக எண்ணம், உணர்வு தோன்றிய பிறகு தான் இதை அறியக்கூடிய நான் தோன்றுகிறது. எண்ணமோ, உணர்வோ, நம்மால் அடையாளம் காணப்படும் போது தான் நான் என்பது தோன்றுகிறது. தாமாக தோன்றிய எண்ணம், உணர்வின் நிழல் தோற்றம் தான் இந்த நான். இந்த நான் ஓர் நிழல் தோற்றம் மட்டுமே. ஒரு மரத்தின் நிழல் எப்படியோ, கானல் நீர் எப்படியோ அப்படி வெறும் நிழல் தோற்றம் தான் இந்த நான்.



"நான் என்பது வெறும் நிழல் தோற்றம் மட்டுமே. அதுவும் தோன்றி மறையக் கூடிய ஒன்றே"

உண்மையில் இருப்பது போல் தெரியும், ஆனால் உண்மையில் இல்லை; வெறும் நிழல் தோற்றம் மட்டுமே உள்ளது. உண்மையில் நான் என்பது இப்படித் தான் இருந்து கொண்டு, தான் நிரந்தரமாக இருப்பதை போல் தோற்றம் அளிக்கிறது. இப்படி நாம் நானைப் பிரித்து புரிந்து கொள்ளும் போது நானும் நிரந்தரமான ஒன்று இல்லை. அதுவும் தோன்றி மறையக் கூடிய ஒன்று தான் என்பது நமக்கு புரிந்து விடுகிறது. நமக்குத் தோன்றும் எண்ணமோ, உணர்வோ நமது கட்டுப்பாட்டில் இல்லை என்கிற போது அதன் நிழல் தோற்றமாகிய நானும் நிரந்தரமான ஒன்று இல்லை. நமக்கு ஏற்படும் எண்ணம், உணர்வுக்கு முக்கியத்துவம் கொடுக்காத போது அதனால் ஏற்படும் நானும் முக்கியத்துவம் இழந்து விடும். எண்ணத்திற்கோ, உணர்விற்கோ நாம் முக்கியத்துவம் கொடுக்காத போது எப்படி பிரவாகத்தில் ஓடி மறைந்து விடுகிறதோ அதுபோல் இந்த நானும் ஓடி மறைந்து விடும். எண்ணம், உணர்வு, நான் என அனைத்தும் தாமாக ஓடி மறையும் போது நாமே ஓடிக் கொண்டிருக்கும் ஆறாகவே மாறிவிடுகிறோம்.



# ஆசிரியர் பகுதி




K.S. ஜீவமணி
செல் : 97891-65555


அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

சென்ற மாதத்தில் இருந்து பகவத் பாதையைத் தரமாகவும் வண்ண மயமாகவும் மாற்றியுள்ளோம். பலரிடமும் இருந்து பாராட்டுகள் வந்த வண்ணம் உள்ளன. மிக உயர்ந்த ஞானத்தை கொடுக்கும் நமது மாத இதழ் அனைவருடைய பார்வைக்கும் தரமாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தின் விளைவே இது.

ஆன்மிகத்தில் மிக உயர்ந்த நிலையாக கருதப்படுவது முக்தி, மோட்சம் என்று அழைக்கப்படும் விடுதலையைதான். அந்த விடுதலையைப் பெற காரணமான புரிதலையே ஞானம் என்று அழைக்கின்றோம்.

இந்த ஞானம் யாருக்குத் தேவை?

ஆன்மிகத்தில் தேடுதல் உள்ளவர்களுக்கு மட்டும் தானா?

இல்லை, ஒட்டுமொத்த மனித குலத்திற்கே தேவையானதா?

ஒட்டு மொத்த மனித குலத்திற்கே தேவையான ஒன்றாகத்தான் உள்ளது. ஞானம் என்ற வார்த்தையை உபயோகிப்பதால் இது ஆன்மிகம் சம்பந்தப்பட்டது என்று அனைவரும் எடுத்துக் கொள்கிறார்கள். இதையே ஒரு தீர்க்கமான மனத் தெளிவு என்று எடுத்துக் கொண்டால் மனித குலத்திற்கே தேவையான ஒன்றாகத்தான் உள்ளது.

நாம் அனைவரும் அன்றாடம் எதிர்கொள்ளும் பிரச்சினை நம் மனதில்தான் உள்ளது. நமக்கு ஏற்படும் இன்ப துன்ப உணர்வுகள் அனைத்தும் நம் மனதில்தான் ஏற்படுகிறது. எனவே விடுதலையும் மனதிற்கு தான் தேவைப்படுகிறது. விடுதலையை தரவல்ல தீர்க்கமான மனத் தெளிவைத்தான் ஆன்மிகத்தில் ஞானம் என்று கூறுகிறார்கள். இது ஒவ்வொரு சராசரி மனிதனுக்கும் தேவையான ஒன்று. இந்த விடுதலைக்கு பின்பே நமது வாழ்வு ஒரு முழுமையான வாழ்வாக அமையும்.

இந்த தீர்க்கமான மனத் தெளிவை உலக மக்கள் அனைவருக்கும் கொடுக்க வேண்டும் என்பதே நமது பகவத் மிஷனின் நோக்கம். அந்த வகையில் சென்ற 17, 18, 19 தேதிகளில் ஜீலை மாதத்தில் நடைபெற்ற பொள்ளாச்சி ஞானமுகாம் பலருக்கும் நல்லதொரு தெளிவைக் கொடுத்திருக்கிறது. பொள்ளாச்சியைச் சேர்ந்த புதிய அன்பர்கள் பலரும் கலந்து கொண்டனர்.

அங்கு நடந்த ஒரு சுவாரசியமான சம்பவம், ஞானமுகாமில் மைக், ஸ்பீக்கர் போன்றவற்றை இயக்குவதற்காக முத்து என்பவரை நியமித்திருந்தார்கள். இவர் படிப்பறிவு இல்லாத பாமரர். பார்வைக்கும் அப்படியே. ஆன்மிகத்தில் எந்த நாட்டமும் இல்லாதவர். தோற்றத்தில் மெலிந்த தேகம், கருத்த நிறம், கலைந்த கேசம் என ஒரு கிராமத்து பாமர மனிதராக காட்சி அளித்தார். மைக்கையும் ஸ்பீக்கரையும் இயக்குவதால், ஞானமுகாம் நடைபெறும் 3 நாள் முழுவதும் அங்கேயே இருக்க வேண்டிய கட்டாயம். ஞானமுகாம் நடைபெறும் ஹாலுக்கு வெளியே ஸ்பீக்கர் வைக்கப்பட்டிருந்தது. இவர் ஞானமுகாமின் ஒவ்வொரு அமர்வின் போதும் மைக்கையும் ஸ்பீக்கரையும் சரிசெய்து கொடுத்துவிட்டு வெளியில் உள்ள ஸ்பீக்கருக்கு அருகில் அமர்ந்து கொள்வார். ஐயாவின் ஒவ்வொரு உரைக்குப் பின்பும் கேள்வி பதில் நேரம் வரும். கலந்து கொண்ட அன்பர்களில்

பலர் மிக ஆழமான கேள்விகளை கேட்டனர். ஞானமுகாமின் இறுதிநாள் வந்தது. மதிய உணவுக்குப் பின் அனைவரும் கிளம்புவதாக இருந்தது. அன்று காலை இடைவேளையின் போது இவர் என்னிடம் வந்தார், " ஐயா, ஞானமுகாம் இன்றோடு முடிந்து விட்டதா !? அவ்வளவுதானா!? " என்று கேட்டார், "ஆமாம் ஞானமுகாம் நிறைவு பெற்றது, மதியம் அனைவரும் கிளம்பிவிடுவோம் " என்று கூறி " ஏன் இதை கேட்கிறீர்கள் " எனக் கேட்டேன்.

" என்னவென்று தெரியவில்லை, ஐயாவின் பேச்சைக் கேட்டதிலிருந்து மனம் மிகவும் லேசாகவும் அமைதியாகவும் ஆகிவிட்டது. இங்கிருந்து செல்லவே மனம் இல்லை. நான் வழக்கமாகத் தினமும் அரை பாட்டில் அளவு மது குடிப்பவன், மது குடிக்காமல் என்னால் இருக்கவே முடியாது. ஆனால் இந்த மூன்று நாட்களாக அதைப்பற்றிய சிந்தனையே இல்லாமல் இருக்கிறேன். எனக்குள் என்ன நடந்தது என்றே தெரியவில்லை" என்று கூறியதோடு, இனி மது குடிக்கப்போவதில்லை என்று முடிவெடுத்திருப்பதாகவும் இதனால் தினமும் மீதியாகும் 200 ரூபாயை மனைவியிடம் வீட்டுச் செலவுக்கு கொடுக்கப் போவதாகவும் தெரிவித்தார். இவரது நிலையை அனைவருக்கும் தெரிவித்தேன், அனைவருக்கும் ஆச்சரியத்தை கொடுத்தது. இவருக்கு மேலும் ஐயாவின் சில நூல்களை கொடுத்து உதவலாம் என

கொடுத்தோம். ஆனால் இவர் " எனக்கு படிக்க தெரியாது " CD இருந்தால் கொடுங்கள் ஐயாவின் பேச்சை என் நண்பர்களுக்கும் போட்டுக் காட்டுவேன் " என்று கேட்டு ஐயாவின் கைகளாலேயே பெற்றுக் கொண்டார். படிப்பறிவு இல்லாதவர்கள் கூட ஞானத்தைப் பற்றி இதுவரை எந்த ஒரு முன் கருத்தும் சேர்த்து வைக்காததால் மிக விரைவில் தெளிவு பெற்று விடுகிறார்கள்.

இன்னும் சுவாரசியமானது இவர் என்னிடம் கேட்ட அடுத்த கேள்வி, " ஐயா தான் இவ்வளவு தெளிவாகவும், எளிமையாகவும் சொல்லிக் கொடுக்கிறாங்களே, இவர்கள் ஏன் இவ்வளவு கேள்விகள் கேட்டுகிட்டு இருக்காங்க– " என்று வெள்ளந்தியாகக் கேட்டார். கருத்துச் சுமை இருப்பவர்களுக்குக் கேள்விகள் நிறைய இருக்கத்தானே செய்யும்.

உண்மையில் இதுவரை ஒரு புதிராக இருந்த ஞானத்தை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் பாமர மனிதர்களும் புரிந்து கொள்ளும் வகையில் மிக எளிமையாக்கி விட்டார் என்பதற்கு இந்த நிகழ்வே உதாரணமாகி விட்டது.

எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுதலை தரவல்ல இந்த உயர்ந்த ஞானத்தை ஒரு தீர்க்கமான மனத் தெளிவாக எடுத்துக் கொண்டால், ஆன்மிகம் சார்ந்தவர்களுக்கு மட்டுமல்லாமல் மனித குலத்திற்கே தேவையான தெளிவு என்பது மிக நன்றாகப் புரிந்துவிடும்.

இதைப் புரிந்தவர்களாகிய நாம்தான் இந்தத் தீர்க்கமான மனத் தெளிவை உலக மக்கள் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும். இது பகவத் பாதையில் பயணத்திடும் நம் அனைவரின் கடமையும் கூட...



# ஆஸ்ரமத்தின் தேவை

ஆஸ்ரமம் பிறந்ததற்கு ஒரு கதை உள்ளது.

நம்மிடம் தொடர்பு கொண்டு பேசும் பலர் கேட்பதுண்டு, " உங்கள் ஆஸ்ரமம் எங்கே இருக்கிறது- " என்று.

"ஆஸ்ரமம் எதுவும் கிடையாது; நான் எனது வீட்டோடு தான் இருக்கிறேன்" என்று அவர்களுக்கு பதில் கூறுவதுண்டு.

தற்போது ஆஸ்ரமம் அமைக்கவும் திட்டமிட்டுள்ளோம். ஆஸ்ரமத்துக்கு என்ன பெயர் வைக்கலாம் என்று எண்ணிப் பார்த்த போது,

"அனாதை ஆஸ்ரமம்" என்ற பெயர் தான் மனதில் தோன்றியது.

அப்டியொரு பெயர் தோன்றியதே தவிர அந்தப் பெயரை உபயோகிக்கும் எண்ணமும் இல்லை.

"அனாதை ஆஸ்ரமம்" என்ற பெயர் ஏன் தோன்றியது என்பது மிகவும் வெளிப்படையானது.

எனது துணைவியார் காலமாகி விட்டதிலிருந்து அனாதை ஆகிவிட்டது போன்ற ஓர் உணர்வுதான் ஏற்பட்டு வந்தது. அனாதைக்காக ஓர் ஆஸ்ரமம் அமைக்கப்பட்டால் அதை அனாதை ஆஸ்ரமம் எனக் கருதுவதில் தவறு கிடையாது. ஆனால் அந்தப் பெயர் பலருக்கும் மன இறுக்கத்தையோ அல்லது உருக்கத்தையோ ஏற்படுத்தி விடும். ஆகவே நமது ஆஸ்ரமத்திற்கு "ஸ்ரீ பகவத் பவன் " எனப் பெயரிட்டுள்ளோம்.

சமையல் செய்து தரும் வசதியுடன் உள்ள ஒரு குடிலைத்தான் எதிர்பார்த்தேன். ஆனால் எவரும் நம்மை அனாதையாக விடுவதற்கு தயாரில்லை.

எல்லோருக்கும் குடும்பத்தோடு வந்து பகவத் குடும்பமாக தங்கிச் செல்லும் மாளிகையை அமைக்கத் திட்டமிட்டுள்ளார்கள்.

உங்கள் அனைவரையும் நான் வரவேற்க வேண்டுமா–

விருந்தினரை வரவேற்கலாம் குடும்பத்தினரை வரவேற்கத் தேவையில்லை. உங்கள் இல்லத்துககு நீங்கள் வந்து செல்ல இன்னுமொருவர் வரவேற்கத் தேவையில்லை.

இது பற்றிய விபரங்களை மிஷன் தலைவர் விளக்குவார்கள்.

உங்கள் **ஸ்ரீ பகவத்**



# ஸ்ரீ பகவத் பவன்

**Dr. N. கைலாசம்**
தலைவர் ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

சேலம் திருவருட்சோலையில் 26.7.2015 அன்று சற்குருநாதர் தேனி சுவாமிகள் முன்னிலையில் ஸ்ரீ பகவத் பவன் கலந்தாலோசனைக் கூட்டம் நடைபெற்றது. சென்னை, கோவை, ஊட்டி, திருநெல்வேலி, பழனி, நாகப்பட்டணம் போன்ற பல ஊர்களிலிருந்தும் 50க்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர்.

கலந்தாலோசனைகளுக்குப் பிறகு அக்கூட்டத்தில் பின்வரும் முடிவுகள் எடுக்கப்பட்டன.

1. ஸ்ரீ பகவத் பவன் என்ற பெயரில் ஸ்ரீ பகவத் அய்யா தங்குவதற்கு ஒரு கட்டிடமும், மீட்டிங் ஹால் மற்றும் வருபவர்கள் தங்குவதற்கு பத்து காட்டேஜ் அறைகளுக்கு ரூ. 50 லட்சம் செலவில் அமைப்பது என்றும்.

அதற்காக அமைக்கப்பட்ட கட்டிட வரைபடத் திட்டத்தில் முதற்கட்டமாக தரைதளத்தில் 10 காட்டேஜ்களும் அவற்றின் முதல் தளத்தில் மீட்டிங் ஹால் மற்றும் ஹாலுடன் இணைந்த ஐயாவுக்கான ஓய்வறையைக் கட்டுவது என்றும்.

இரண்டாம் கட்டமாக அய்யா தங்குவதற்கான தனிக் கட்டிடம் அமைப்பது என்றும்,

கட்டிட வேலைகளை 23.08.2015 அன்று காலை 7.23 மணிக்கு ஆரம்பித்து ஓராண்டுக்குள் நிறைவேற்றுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

(மீட்டிங் ஹாலுடன் இணைந்த ஓய்வரை மட்டும் தனக்குப் போதும், தனிக் கட்டிடம் எதுவும் தனக்குத் தேவையில்லை என்ற ஸ்ரீ பகவத் அய்யா அவர்களின் கோரிக்கை ஏகமனதாக அனைவராலும் நிராகரிக்கப்பட்டது.)

2. ஸ்ரீ பகவத் பவன் கட்டுவதற்கான முழுத் தொகையையும் ஸ்ரீ பகவத் ஞானக் குடும்பத்திலுள்ளவர்களிடம் நன்கொடையாகப் பெறுவது என்றும், நன்கொடைத் தொகை எவ்வளவு குறைந்த தொகையாக இருந்தாலும் அதனை மனமுவந்து ஏற்றுக் கொள்வது என்றும் நன்கொடைத் தொகையை மொத்தமாகவோ, தவணை முறையிலோ, செலுத்தலாமென்றும், அதனைப் பணமாகவோ, காசோலையாகவோ, ஆன்லைன் மூலமாகவோ, கட்டிடத்துக்குத் தேவையான பொருட்களாகவோ செலுத்தலாமென்றும், **ரூ. 25,000/–** அல்லது அதற்கும் அதிகமாக வழங்குபவர்கள் அனைவரும் **ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர்களாக – Foundar** களாகச் சேர்க்கப்படுவார்கள் என்றும், இதன் வரவு செலவுகளை சேலம் மிஷன் நிர்வாகம் செய்யும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

கீழ்கண்ட வங்கி கணக்குகளில் நன்கொடைகளை வழங்கலாம்.

1. A/c Name : Sri Bagavath Mission SBI Bank A/c No. : 31784345329 IFS Code: SBIN0012772 Salem Ammapettai Branch.
2. HDFC Bank A/c No. : 15907620000075 IFS Code: HDFC0001590 Salem Car street Branch.

(சற்குருநாதர் தேனி சுவாமிகள் ரூ. 1000/- வழங்கி நன்கொடையை ஆரம்பித்து வைத்தார்கள். துரையூர் ஸ்ரீ மத் ஸ்வரூபானந்த சுவாமிகள் தமது பங்காக ரூ. 1000/- வழங்கினார்கள். சேலம் திரு. ஜீவமணி மற்றும் திரு. சரவணன் தலா ரூ. 3லட்சம் வழங்குவதாகவும், நாகப்பட்டினம் திரு. முத்துச் செல்வன் ரூ. 1 லட்சம் வழங்குவதாகவும் அறிவித்தார்கள். பரமத்தி வேலூர் ராஜகோபால் அவர்கள், சென்னை தியாகராஜன் அவர்கள், கோவை முரளிகண்ணன், கரூர் சிவகுரு ஆகியோர் ரூ. 25,000/- முதல் 50,000/- வரை வழங்குவதாக அறிவித்தார்கள். சென்னை வெஸ்ட் மாம்பலம் ரவிச்சந்திரன் அவர்கள், சென்னை மிஷன் அன்பர்கள் மூலம் 5 முதல் 10 லட்சம் வரையிலும் வழங்குவதாக அறிவித்தார்கள்.

கூட்டத்திற்கு வர முடியாத சிலர் இதுபோல் வழங்குவதாக தகவல்களை அனுப்பியுள்ளனர்.

3. இந்த விவரங்களை அனைத்தையும், பகவத் பாதை மூலமாகவும், தபால் மற்றும் தகவல்கள் மூலமாகவும் ஸ்ரீ பகவத் ஞானக் குடும்பத்தினர் அனைவருக்கும் தெரிவித்து தேவையான நிதி ஆதாரத்தை அமைத்திடுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

மேற்கண்ட தீர்மானங்களை நம் குடும்பத்தினர் அனைவரும் ஏற்று ஆதரவு தந்திடுமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

**Dr. N. கைலாசம்**
தலைவர் ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

## நிகழ்ச்சியின் நிழல்கள்



பொள்ளாச்சி ஞானமுகாமில் கலந்து கொண்டவர்கள் ஸ்ரீ பகவத் ஐயாவுடன்




பொள்ளாச்சி ஞானமுகாமில் ஸ்ரீ பகவத் ஐயாவுடன் திரு. சரவணன் மற்றும் திரு. ஜீவமணி அவர்கள்



ஜூலை மாதம் 17 முதல் 19 வரை பொள்ளாச்சியில் நடைபெற்ற ஞானமுகாமில் ஒரு பகுதி



பகவத் பாதை நூலை சற்குருநாதர் தேனி சுவாமிகள் வெளியிட துறையூர் ஸ்ரீமத் ஸ்வரூபானந்தா சுவாமிகள் பெற்றுக் கொண்டார்

# ஜென் கதை “சமாதானம்”



மன்னன் ஒருவன் மலை தேசத்தை ஆண்டு வந்தான். அவன் மனத் துன்பங்களிலிருந்தும், துயரங்களிலிருந்தும் விடுபட வேண்டும் என்று தேடி அலைந்தான். ஒரு ஞானியைச் சந்தித்து அதற்கான வழியைக் கேட்டான்.

ஞானி “முரண்பாடே துன்பத்திற்குக் காரணம், சமாதானமே விடுதலைக்கான வழி” என்று கூறிச் சென்று விட்டார்.

இந்தப் பதில் அவனுக்கு குழப்பத்தையே தந்தது, “எப்படி முரண்படாமல் இருப்பது– ஒரு நாட்டை ஆளும் மன்னன், நாட்டில் நடக்கும் தவறுகளைத் திருத்த வேண்டாமா– விரோதிகளை விரட்ட வேண்டாமா– அனைவருடனும் சமாதானமாக இருந்தால் எவ்வாறு சிறந்த ஆட்சி செய்வது–” என்று யோசித்துக் குழம்பிக் கொண்டிருந்தான்.

ஆனால் விடை கிடைத்தபாடில்லை, நாட்கள் ஓடின.

அவனுடைய மலைப் பாங்கான தேசத்தின் கரடுமுரடான பாதைகளும், பாதைகளில் இருக்கும் கற்களும் நடப்பவர்களின் காலில் குத்தித் துன்புறுத்தின. எல்லா சாலைகளிலும் மாட்டுத் தோலை விரிக்க உத்தரவிட்டான் மன்னன். அப்போது தான் நடப்பதற்கு மெத்தென்று இருக்கும் என்பது அவனது எண்ணம். இதை எவ்வாறு செயல்படுத்துவது என்று தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்தார்கள் பணியாளர்கள். மன்னனுக்கும் வழி தெரியவில்லை. மீண்டும் அந்த ஞானியைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. தன் பிரச்சினையை எடுத்துக் கூறினான் மன்னன்.

“எல்லாச் சாலைகளிலும் மாட்டுத்தோலை விரிப்பதா, இது என்ன அறியாமை–” என்றார் குரு.

“வேறு என்ன வழி” என்றான் மன்னன்.

தேசம் முழுவதும் மாட்டுத் தோலால் போர்த்துவதை விட உன் மக்களின் கால்களில் இரண்டு தோல் துண்டுகளால் ஆன காலணிகளை அணிந்தால் போதுமே !” என்று கூறினார் ஞானி.

இதைக் கேட்ட மன்னன் விழிப்புணர்வு பெற்றான். அன்று ஞானி கூறிய “முரண்பாடே துன்பத்திற்கு காரணம், சமாதானமே விடுதலைக்கு வழி ” என்ற கூற்றுக்கான விடை கிடைத்தது.

இது புறத்திற்கு அல்ல, அகத்திற்கு என்பது நன்றாகப் புரிந்தது. “நாம் முரண்படக்கூடாத இடம் நம்மோடுதான், நாம் சமாதானத்துடன் இருக்க வேண்டியது நம் மன உணர்வுகளோடு தான்”. என்பதை மிக நன்றாக புரிந்து கொண்டான்.

உண்மையில் நமது அக முரண்பாடு தான் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் காரணமாக இருக்கிறது என்பதை மன்னன் புரிந்து கொண்டான்.

**“புறம் நாம் செயல்பட வேண்டிய இடம், அகம் நாம் சமாதானத்துடன் ( சும்மா ) இருக்க வேண்டிய இடம்.”**

## நிகழ்ச்சி நிரல்கள்

| நாள் | நேரம் | இடம் | பொருள் | ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|---|
| 29-08-2015 சனி | 6.00pm to 8.00pm | **வாணிகா வைஷியர் திருமண நிலையம்** வில்லியனூர், புதுச்சேரி. | **தன்னை அறியும் ஞானம்** | **098867 47564 095859 79002** |
| 30-08-2015 ஞாயிறு | 6.00pm to 8.00pm | **அருள்மிகு ஸ்ரீ அரங்க இராமனுஜர் பஜனை மடம்,** 111, செயின் தெரேஸ் வீதி, (போதீஸ் எதிர் வீதி) புதுச்சேரி. | **தன்னை அறியும் ஞானம்** | **098867 47564 095859 79002** |
| 05-09-2015 சனி | 5.00pm to 7.00pm | **ஸ்ரீ மகான் ஒடக்கதூர் சுவாமிகள் மடம்** ஹல்சூர் லேக் அருகில், பெங்களூரு. | **தன்னை அறியும் ஞானம் (ஆங்கிலம்)** | **098869 26464 099026 47334** |
| 06-09-2015 ஞாயிறு | 5.00pm to 7.00pm | **ஸ்ரீ மகான் ஒடக்கதூர் சுவாமிகள் மடம்** ஹல்சூர் லேக் அருகில், பெங்களூரு. | **தன்னை அறியும் ஞானம் (தமிழ்)** | **098869 26464 099026 47334** |

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555